வேலைக்கான சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும் என்பதுதான் சர்க்காருடைய கொள்கை. ஆகையால், தியாகிகள் என்று இருந்தாலும், அவர்களுடைய குடும்பமாக இருந்தாலும், அவர்களுக்கும் ஒரு தகுதி, ஒரு படிப்பு ஏற்படுத்தி, அதற்கான பயிற்சி கொடுத்து, அதற்குப் பிறகு ஏற்பாடு செய்யவேண்டும். பென்ஷன் போன்று கொடுத்துவிட முடியாது. கட்டபொம்மன் சந்ததியாருக்குக் கொடுத்துக் கொண்டிருப்பதைப்போல், பென்ஷன் கொடுப்பதற்குப் பதிலாக, நல்ல வேலை செய்யக்கூடிய தகுதி உள்ளவர்களாக இருக்கும்போது, அவர்களுக்கு வேலை செய்யக்கூடிய சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுப்பதுதான் அவர்களுக்கு நல்ல முறையிலே செய்வது. எந்தக் கட்சியில் இன்றைக்கு இருக்கிறார்கள் என்ற கணக்கு இல்லாமல், சுதந்திர இயக்கத்திலே யார் ஈடுபட்டிருந்தாலும், அவர்கள் இன்றைக்கு எந்தக் கட்சியில் இருந்தாலும், கட்சிப் பாகுபாடு இன்றி, அந்த அடிப்படையிலே கொடுக்கிறோமே அன்றி, எந்தக் கட்சியில் இருக்கிறார்கள் என்று பார்த்துக் கொடுப்பதில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதிலே எந்த விதமான கொள்கை மாறுதலும் இல்லை. முன்பே வகுக்கப்பட்ட கொள்கை. செலவு இன்றைக்கு ஏற்படவில்லை. இந்தச் செலவு பற்றி முன்னமேயே வாதித்து விட்டோம் என்பதைத் தெரிவித்துக்கொண்டு, இந்த மான்யத்தை இந்தச் சபை ஏற்றுக்கொள்ளும் என்ற நம்பிக்கையையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

தனி மான்யங்கள் ஒவ்வொன்றாக விவாதத்திற்கு வரும்போது, ஏதாவது ஒரு மான்யத்தை எடுத்து, அதை பொறுத்து விவாதம் நடத்தலாம் என்று கட்சித் தலைவர்கள் முன்பே தெரிவித்தார்கள். எந்த மான்யத்தை எடுத்துக்கொள்ளப்போகிறார்கள் என்று தெரிவித்தால், அதைப் பற்றி விவாதம் செய்து, இந்தச் சபை ஏக மனதாக இதற்கு வேண்டிய பணத்தை ஒதுக்கும் என்ற நம்பிக்கையோடு என்னுடைய பதிலை முடித்துக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The House will now rise and meet again at 3 p.m.

The House then adjourned.

**(After Lunch—3 p.m.)**

(Mr. Speaker in the Chair.)



## VI.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS CULTIVATING TENANTS PROTECTION (AMENDMENT) BILL, 1958 (L.A. BILL NO. 26 OF 1958).

MR. SPEAKER : We shall now take up for consideration the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1958. If we finish the consideration of this Bill before 5 p.m., we will take up the Madras Plantations Agricultural Income-tax (Amendment) Bill, 1958.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 26 of 1958) be taken into consideration".

17th September 1958] [Sri M. A. Manickavelu]

The life of the Madras Cultivating Tenants Protection Act is due to expire on the 26th September 1958. The question of giving relief to small landowners is now engaging the attention of the Government and it is proposed to undertake the necessary legislation very shortly. In the meantime, it has become necessary to extend the life of the Act for a short period. The Bill accordingly provides for the extension of the life of the Act for another year more.

Sir, there is no provision now in the Madras Cultivating Tenants Protection Act for the transfer of petitions filed under section 4 of the Act from the court of one Revenue Divisional Officer to that of another. There have been cases in which the same Revenue Divisional Officer who had passed orders under section 145, Criminal Procedure Code, had to enquire subsequently into petitions from cultivating tenants for restoration of possession in respect of the same land under section 4 of the Madras Cultivating Tenants Protection Act. In such cases, the parties affected by the proceedings under section 145, Criminal Procedure Code, can apprehend that the opinion formed already by the Revenue Divisional Officer will prejudicially affect their interest in the subsequent enquiry under the Act. It is true that such an apprehension is not unreasonable and that it will be proper to transfer such cases from the court of one Revenue Divisional Officer to that of another within the same district. It is proposed to empower the High Court to order *suo motu* or on representation of parties to transfer cases from the file of one Revenue Divisional Officer to that of another within the district. Clause 3 of the Bill accordingly provides for this.

I request the House to accept the motion.

MR. SPEAKER: Motion moved:

"That the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 26 of 1958) be taken into consideration".

SRI N. K. PALANISAMI: Sir, I move—

"That the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 26 of 1958) be referred to a Select Committee consisting of . . . . members of the Assembly".

SRI S. M. ANNAMALAI: I second the amendment.

MR. SPEAKER: The motion and the amendment are before the House for discussion.

**SRI N. K. PALANISAMI**: கனம் சபாநாயகர் அவர்களே, சர்க்கார் கொண்டுவந்திருக்கக் கூடிய மசோதாவானது, டிஸம்பர் மாதம் வரையில் தான் நீடிக்கப்பட்டிருக்கிறது. இதில் உள்ள குறைபாடுகளைப் பற்றி நாங்கள் ஏற்கெனவே இந்த சபையில் அடிக்கடி எடுத்துச் சொல்லியிருக்கிறோம். சர்க்காருக்கு வேண்டிய அவகாசம் இருந்தும்கூட அக்குறைபாடுகளை எல்லாம் நீக்கி சரியானபடி, விவசாயிகளுக்கு உண்மையிலே பாதுகாப்புக் கொடுக்கும்படியான முறையிலே இந்த மசோதாவைக் கொண்டு வந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். உதாரணமாக, விவசாயிகளுக்கு பாதுகாப்பு கொடுக்கும்படியான முறையிலே இந்த சபையிலே பல யோசனைகள் சொல்லப்பட்டது. ஏற்கெனவே குத்தகைதாரர்கள் பாது

காப்புச் சட்டம் வந்திருந்தும் லட்சக் கணக்கான விவசாயிகள் இன்றும்கூட பூமியிலிருந்து வெளியேற்றப்படுகிறார்கள் என்பது நமக்கு எல்லோருக்கும் தெரியும். அதுபோல் சிறு நில விவசாய பாதுகாப்புச் சட்டம் என்று நாம் விவசாயிகளுக்கு நன்மை செய்ய ஒரு சட்டம் கொண்டு வரும்போது இன்னும் லட்சக்கணக்கான விவசாயிகள் நிலங்களில் இருந்து வெளியேற்றப் படுவார்கள். வழக்கமாக, இருந்து வருவது, வாய் முறையில், வாய் ஒப்பந்தம் மூலந்தான் குத்தகைக்காரர்கள் பூமி குத்தகைக்கு கொடுத்து வந்தார்கள். குத்தகைக்கு உழுதவர்களை, பூமியில் இருந்து வெளியேற்றி விட்டார்கள் என்று ஆர். டி. ஓ. கோர்ட்டிற்கு போய் சொன்னால் மிராசுதார் சார்பில் மணியம், கர்ணம் போன்றவர்கள் சொல்கிறார்கள், இவர்கள் கூலிக்குத்தான் உழுதார்களே தவிர குத்தகைக்கு உழவில்லை என்று சொல்லி வாதாடப்படுகிறது. குத்தகைதார் பேரில் நியாயம் இருந்து அவர்களுக்கு சாதகமாக தீர்ப்பு வரும்போது, மிராசுதார் ஹைக் கோர்ட்டிற்குப் போகிறார்கள். அப்படி அதே சமயம், குத்தகை பாக்கி என்று முன்சீப் கோர்ட்டிலும் விவசாயிகள் மீது வழக்கு போடுகிறார்கள், மிராசுதார்கள். சாதாரண ஒரு விவசாயி எப்படி முன்சீப் கோர்ட்டிற்கும், ஹைகோர்ட்டிற்கும் சென்று வாதாட முடியும்? அவனிடம் அதற்கு வேண்டிய பணம் வேண்டாமா? மிராசுதார், ஒரு நூறு ரூபாய் கொடுத்து விடுகிறேன், நீபோய்விடு என்று சொன்னால் விவசாயி போய் விடுகிறான். ஒரு விவசாயி குத்தகைதாரரா இல்லையா என்று ஆர். டி. ஓ. கோர்ட்டில் இருந்தோ, அல்லது ஹைகோர்ட்டிலும் இருந்தோ முடிவு தெரியும்வரையில் குத்தகை பாக்கிக்கு முன்சீப் கோர்ட்டில் கேஸ் போடக் கூடாது என்று சட்டத்தை திருத்த வேண்டும். அது மட்டுமல்ல. கிராமங்களில் கர்ணம் இருக்கிறார், அவர் மாதா மாதம் ஒவ்வொரு பூமியிலும் இன்னின்ன விளைந்தது என்று ஒரு " க்ராப் ரிபோர்ட் " கொடுக்கிறார். அப்படி கொடுக்கும்போது குத்தகைதார் பேரை விட்டு விட்டு மிராசுதார் பேரில்தான் கணக்கு கொடுக்கிறார், இன்னார் பூமியில்தான் இன்னின்ன வெள்ளாமை விளைந்தது என்று. அதற்குப் பதிலாக, இன்னார்தான் குத்தகை பார்க்கிறார், அந்த பூமியில் இவ்வளவு விளைந்தது என்று கிராப் ரிபோர்ட் கொடுக்கும்படியான விதத்தில் மாறுதல் செய்யப்படவேண்டும். ஆர்.டி.ஓ. தான் இதில் அப்பலெட் ட்ரிப்யூனலாய் இருக்கிறார். அவர் பக்கத்தில் உள்ளவர்களின் விருப்பு வெறுப்புகளுக்கு ஆளாக வேண்டியிருக்கிறது. ஆகவே அவரிடமிருந்து சரியான நியாயம் கிடைக்க வழியில்லை. ஆகவே, அப்பலெட் ட்ரிப்யூனல், டிஸ்டிரிக்ட் கலெக்டராக இருந்தால் மிகவும் நலமாகயிருக்கும். ஹைக் கோர்ட்டிற்கு எப்பொழுது வேண்டுமானாலும், எந்த நடவடிக்கையையும் ஒரு ஆர்.டி.ஓ. யிடமிருந்து அதே டிஸ்ட்ரிக்ட்டில் உள்ள இன்னொரு ஆர்.டி.ஓ. விடம் மாற்ற அதிகாரம் இருக்கிறது. ஆகவே, நான் சொல்வது என்னவென்றால், அப்பலெட் ட்ரிப்யூனல், டிஸ்ட்ரிக்ட் கலெக்டராக இருந்தால் ஹைக்கோர்ட்டிற்கு போகும் செலவை ஓரளவு குறைக்க முடியும் என்று சொல்லிக் கொண்டு இந்த மசோதாவை ஒரு செலக்ட் கமிட்டிக்கு விட வேண்டுமென்று எனது திருத்தத்தைப் பிரேரேபிக்கிறேன்.

*SRI S. M. ANNAMALAI : சட்டமன்ற தலைவர் அவர்களே, இந்த வாரம் பயிரிடுவோர் பாதுகாப்புச் சட்டத்தை நான் செலக்ட் கமிட்டிக்கு விட வேண்டுமென்று சொல்வதற்குள்ள முக்கியமான காரணம், இச்சட்டம் பிற மாவட்டங்களில் இருக்கிறதா இல்லையா என்று கூட தெரியாமல் இருக்கிறது. குறிப்பாக இரண்டாவது க்ளாஸில்,"

" Cultivating tenant means a person who cultivates, by his own labour or by that of any other member of his family or by hired labour under his supervision and control, any land belonging to another under a tenancy agreement, express or implied and includes . . ."

என்று கொடுத்திருக்கிறது. அதில் " விவசாயிகள் " என்பவர் யார் என்று திட்டமாக இந்த செக்ஷனில் சொல்லவில்லை. அது, வழவழ கொழகொழ என்று இருக்கின்றது. திட்டமான கொள்கையை எந்தயிடத்திலும் சொல்லவில்லை. ஆகவே, இக்கொள்கையை வரையறுக்க வேண்டுமென்று

17th September 1958] [Sri S. M. Annamalai]

இதற்குமுன் இந்த சட்ட மன்றத்தில் ஏற்கெனவே நான் பலமுறை பேசியிருக்கிறேன். அதை வரையறுக்கவும், "டெனன்ஸி எக்ரிமெண்ட்" என்பது சாதாரண வாரந்தார், வாரக்காவல் என்று ஒன்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். எக்ரிமெண்ட் என்பது பற்றி மிராசுதார்கள், "It is only a permission and not an agreement" என்று சொல்கிறார்கள். ஆகவே, "எக்ரிமென்ட்" என்றால் என்ன என்பதை இம்மசோதாவில் விளக்கமாக சொல்ல வேண்டும். அப்படி அதை விளக்கமாகச் சொன்னால்தான் அது நிலத்தில் பயிரிடும் வாரந்தார்களுக்கு சற்று பாதுகாப்பு அளிப்பதாக இருக்கும். ஆகவே "எக்ரிமெண்ட்" என்றால் என்ன என்பதை வரையறுக்க வேண்டும். சிறுநில சொந்தக்காரர்களின் பாதுகாப்பிற்காக வேண்டிய, அவர்களுக்கு எப்படி விதிவிலக்கு அளிக்க வேண்டுமென்பதைப்பற்றி பரிசீலனை செய்து சீக்கிரத்தில் இந்த மசோதாவை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப் போகிறோம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அதை வரவேற்கிறேன். வரவேற்பதோடு மட்டுமல்ல, இதை எவ்வளவு சீக்கிரத்தில் பரிசீலனை செய்வார்கள் என்று திட்டவட்டமாக சொல்ல வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதுமட்டுமல்ல, இப்போது சர்க்கார் கொடுத்திருக்கின்ற திருத்தம் இன்னும் ஒரு ஆண்டுக்கு இதை நீட்டுவதாக இருக்கிறது. நானும் என் திருத்தத்தில் இதை 1959-ம் வருஷம் டிஸம்பர் மாதம் வரை இருக்கவேண்டும் என்று குறிப்பிட்டிருந்தேன். இதிலிருந்து என்னுடைய திருத்தம் ஒருவாறு ஏற்றுக்கொள்ளப்பட்டதாக கருதுகிறேன். மேலும் இப்போது ஆர்.டி.ஓ.க்களின் முன்பாக நடைபெறும் வழக்குகள் எல்லாம் மூன்று மாதத்திற்குள் தீர்ப்பு கிடைக்க வேண்டும் என்று இன்னொரு திருத்தம் கொடுத்திருக்கிறேன். இன்றைய நிலைமையில் வாரம் பயிரிடுபவன் ஒருவன் ஒரு வழக்கை கொடுத்தால் அதனுடைய தீர்ப்பு கிடைப்பதற்கு ஓராண்டு, ஈராண்டு காலமாகிறது. ஆகவே இந்த காலதாமதம் இல்லாமல் மூன்று மாதத்திற்குள், அந்த வழக்கு எப்படிப்பட்ட வழக்காக இருந்தாலும்கூட பரிசீலனை செய்து முடிவு சொல்ல வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறேன். ஆகவே இதை செலக்ட் கமிட்டிக்கு விடவேண்டும் நான் கூறியிருப்பதன் காரணம், முக்கியமாக இதில் சொல்லப்பட்டிருக்கும் விவசாயி யார் என்பதை நிர்ணயிக்க வேண்டும், அதோடு நான் முன்னால் சொன்ன காரணங்களுக்காகவும் இதில் பல திருத்தங்கள் செய்யவேண்டியிருப்பதால் இதை செலக்ட் கமிட்டிக்கு விடவேண்டும் என்று சொல்லியிருக்கிறேன். ஆனால் அமைச்சர் அவர்கள் சொல்லியிருப்பதுபோல் இதை கூடிய சீக்கிரத்தில், ஒரு காலவரையறைக்குள் பரிசீலனை செய்யலாம் என்று உறுதியளித்தால் சர்க்காருடைய திருத்தத்தை ஆதரிக்கலாம் என்பதையும் கூறிக் கொண்டு முடித்துக்கொள்கிறேன். 3-20 p.m.

**Sri S. LAZAR**: கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது விவசாய பாதுகாப்பு சட்டத்தை திருத்தும் நோக்கத்துடன் அரசாங்கம் கொண்டு வந்திருக்கும் திருத்தத்தை ஆதரித்து ஒரு சில கருத்துக்களை சொல்ல ஆசைப்படுகிறேன். அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கக்கூடிய இந்த திருத்தமானது, ஏற்கெனவே இருந்துவரக்கூடிய இந்த சட்டத்தை இன்னும் சில காலத்திற்கு நீடிப்பதோடுகூட இதில் நடைமுறையில் வரக்கூடிய ஒரு கஷ்டத்தை ஹைக்கோர்ட்டு எடுத்துக் காண்பிப்பதின் மூலம் அதை மாற்றவேண்டும் என்ற நோக்கத்தோடும் இந்த திருத்தம் கொண்டு வந்திருப்பதால் இதை நான் பாராட்டுகின்றேன். ஆனால், இந்த சட்டத்தில் மிக முக்கியமான சில குறைகள் இருக்கின்றன. அவைகளை நீக்குவதற்கு அமைச்சர் அவர்கள் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். முதலாவதாக இப்போது இருக்கக்கூடிய சட்டத்திலே, விவசாயி ஒருவன் உழுது கொண்டே வருவானேயானால், அவனை நிலத்திலிருந்து அப்புறப்படுத்திக் கொள்ள வேண்டுமேயானால், புதிதாக கொண்டு வருபவனுடைய நிலைமை என்ன என்பதைப் பற்றி இதுவரை தெளிவாக சொல்லப்படவில்லை. அது காரணமாக நாட்டில் பல கஷ்டங்கள் இருந்து கொண்டிருக்கின்றன. ராமசாமி என்று ஒருவன் உழுது கொண்டிருக்கின்றான் என்றால் நாளையதினம் குப்புசாமி என்று

ஒருவன் புதிதாக வந்துவிடுகின்ற காரணத்தால் நிலத்தின் சொந்தக் காரன் எப்படி அவனை அப்புறப்படுத்துவது என்பதைப்பற்றி குறிப்பாக சொல்ல வில்லை. சட்டத்தில் இருப்பது implied or expressed என்றிருக்கிறது. ஆனால் implied or express under whom என்று குறிப் பிடப்படவில்லை. இதனால் பல தொல்லைகளும் கஷ்டங்களும் நாட்டில் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. ஒரு பக்கத்தில் நிலக்காரர் சட்டத்திலே இருக்கின்ற சில காரணங்களுக்காக வெளியேற்றவேண்டுமென்று நினைத் தால் அவரால் வெளியேற்ற முடிவதில்லை. அதே நேரத்தில் குத்தகைக்கு உழுதுகொண்டிருக்கக்கூடியவனுக்கு சட்டத்தின்படி சில பாதுகாப்புக் கிடைக்கவேண்டும் என்று நீதி ஸ்தலத்தில் வந்து கேட்கின்ற சமயத்தில் அவனுக்கும் நீதி கிடைப்பதற்கு வழியில்லாமல் இருக்கிறது. ஆகவே இந்த பெருங்குறையை மாற்றவேண்டுமென்று திருத்தம் கொண்டுவந் திருந்த போதிலும் கூட Specific lessees யார் என்பதை குறிப்பிட்டு சொல்லியாகவேண்டும். அடுத்தபடியாக இப்போது இந்த சட்டம் அமுலில் இருக்கின்ற காரணத்தால் வாழை, கொடிக்கால் விவசாயிகள் பல கஷ்டங் களை அனுபவிக்கிறார்கள். இன்றையதினம் கொடிக்கால் விவசாயம் செய்யும் ஒரு ஏக்கர் நிலத்தில் 25 நபர்கள் வேலை செய்கிறார்கள். இந்த கொடிக்கால் விவசாயம் குறைந்தது மூன்று வருடங்களாவது நடக் கும். இவ்விதம் மூன்று வருடங்கள் கழிந்த பிறகு அதில் வேலை செய்து கொண்டிருந்த விவசாயிக்கு வெளியே வந்த உடன் ஒரு நிலம் பயிரிடுவ தற்கு கொடுத்தாக வேண்டும். இப்போது இருக்கின்ற சட்டத்தின்படி அவர்களுக்கு விசேஷமான பாதுகாப்பு ஒன்றுமில்லை. குறிப்பாக நம் மாகாணத்தில் லட்சக்கணக்கானவர்கள் இந்த கொடிக்கால் விவசா யத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். இவர்கள் தங்கள் குறைகளை நிவர்த் திக்கவேண்டும் என்று அரசாங்கத்திற்கு பல மனுக்கள் கொடுத்திருக் கிறார்கள். குறிப்பாக லால்குடி பக்கத்திலுள்ளவர்கள் அரசாங்கத்திற்கு மனு கொடுத்திருக்கின்றார்கள் என்று அறிகிறேன். இப்போது இருக்கின்ற சட்டத்தின்படி வாழை கொடிக்கால் விவசாயிகளுக்கு பாதுகாப்பு கொடுக்க முடியாது என்றிருந்த போதிலும்கூட இந்த விவசாயம் பெருவாரியாக இருக்கும் சில இடங்களை மாத்திரம் தனியாக தெரிந்தெடுத்து Specifically setting apart for these purposes அந்த இடங்களை ஒதுக்கி வைத்து அந்த இடங்களிலுள்ள விவசாயிகளுக்கு வசதி செய்து கொடுக்க வேண்டியது மிக அவசியம் என்பதை வற்புறுத்தி சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதற்கு அடுத்தபடியாக இப்போது கொண்டு வந் திருக்கின்ற திருத்தமானது மிக அவசரமும் அவசியமானதும் கூட என்று அமைச்சர் அவர்கள் கூறியிருக்கிறார்கள். வெகு நாட்களாக சிறு நில மிராசுதார்கள், அதாவது இரண்டு ஏக்கர், மூன்று ஏக்கர், ஐந்து ஏக்கர் என்று வைத்திருப்பவர்கள், அவர்களுடைய நிலங்களை தாங் களே விவசாயம் செய்யவேண்டும் என்றுள்ள ஆசை ஏற்படுமானால், அந்த அடிப்படையான உரிமையை கொடுப்பதற்கு இதிலிருந்து விதிவிலக்கு அளிக்கவேண்டும் என்று வற்புறுத்திச் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த சிறு நில மிராசுதார்கள் தாங்கள் எத்தனை ஏக்கர் நிலம் வைத்திருந் தாலும், அதாவது நூற்றுக்கணக்கான ஏக்கர் நிலம் வைத்திருந்தாலும் தனக்கென்று ஐந்து ஏக்கர் விவசாயம் செய்யவேண்டும் என்று நினைப்பா ரானால் அவருக்கு அதை எடுத்துக்கொள்வதற்கு, அதை அவருடைய அடிப்படை உரிமை என்ற காரணத்தின் பேரில் கொடுக்கவேண்டும். சொத்துக்கு உரிமையாளர் என்கிற முறையில் அதை இஷ்டப்படுத்திக் கொள்ள உரிமை உண்டு. பாதுகாப்பு என்ற எண்ணத்தின் பேரில் மற்ற வர்களுடைய நிலத்தில் விவசாயம் செய்வதற்கு உரிமை கொடுப்பதற்கு சட்டம் கொண்டுவருவது வரவேற்கத்தக்கதுதான். இருப்பினும் நிலச் சொந்தக்காரரின் அடிப்படை உரிமை என்றளவில் அவருக்கு ஒருசில ஏக்கர்கள் அதாவது ஐந்து ஏக்கர் வரை கொடுக்க வேண்டியது மிக மிக அவசியம் என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இன்னும் ஒரு சில இடங்களில், அதிலும் குறிப்பாக சில தாலுகாகளில் இது சம்பந்தமான வழக்குகள் கோர்டில் வருகின்ற சமயத்தில், அதன் பேரில் வாதாடுகின்ற நேரத்தில் இதில் சில டெக்னிகல் பாயிண்ட்ஸ் இல்லை என்ற காரணத்தின் பேரில் அங்கு கொடுக்கப்படும் சாட்சியத்தை ஒப்புக்கொள்வதில்லை.

17th September 1958] [Sri S. Lazar]

இதற்காக யார், யார் எந்தெந்த நிலங்களில் உழுது சாகுபடி செய்கிருர்கள் என்கிற ஒரு தனிப்பட்ட ரெஜிஸ்டரை அரசாங்கம் வைத்துக்கொள்ளுமானுல் இது போன்ற ஒரு கஷ்டம் ஏற்படாது, எந்த நோக்கத்தோடு அரசாங்கம் இந்த சட்டம் கொண்டு வந்ததோ அதை நிறைவேற்றுவதாக இருக்கும் என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அடுத்தபடியாக பாது காப்பு உரிமை கொடுக்கவேண்டும் என்கிற காரணத்திற்காக கோர்ட்டில் சட்ட ரீதியாக மனுக்கள் கொடுக்கும்போது, ஒரு சில இடங்களில் சரியான அளவுக்கு உத்தியோகஸ்தர்கள் இல்லாத காரணத்திஞலும், சில இடங் களில் உத்தியோகஸ்தர்கள் இருந்தும் கூட அதிகப்படியான கேஸ்கள் பல சூழ்நிலையின் காரணமாக பலமாதங்களாக ஒத்திப் போடப்படுகிறது. இதன் காரணமாக அவர்களுக்கு கிடைக்க வேண்டிய பரிகாரம் கிடைப்ப தற்கு காலதாமதம் ஆகிறது. சட்டரீதியாக ஒருவனுக்கு நீதி கிடைக்க வேண்டிய சமயத்தில் கிடைக்கவில்லை என்ருல் நீதி கிடைக்காததற்கு சமம் என்று சொல்லுவது போல் காலதாமதம் ஆவதால் பல கஷ்டங்களும் ஏற்படுகிறது. ஆகவே அவர்களுக்கு சீக்கிரமாக பரிகாரம் ஏற்படுவதற்கு தகுந்த முறையில் அவர்களுக்கு நீதி கிடைப்பதற்கு வேண்டிய வழக்குகளை சீக்கிரமாக பைசல் செய்ய வேண்டும். இதற்கு பதில் சொல்லுகின்ற முறையில் அல்லது, முடிவு சொல்லுவதற்கு, ஒரு காலவரையறையை நிர்ணயித்து இது போன்ற வழக்குகளுக்கு முடிவு சொல்லவேண்டும் என்ற நல்லதொரு திருத்தத்தை கொண்டு வந்து நிறைவேற்றவேண்டும் என்று அமைச்சர் அவர்களை கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* SRI R. SRINIVASA IYER: சபாநாயகர் அவர்களே, சர்க்காரால் கொண்டுவரப்பட்ட இந்தத் திருத்த மசோதாவை ஆதரித்தும், இதை செலக்ட் கமிட்டிக்கு விடவேண்டுமென்று கொண்டுவரப்பட்டுள்ள பிரேரணையை எதிர்த்தும் பேச விரும்புகிறேன். 3-20 p.m.

இரண்டு விஷயங்களுக்காக இந்தத் திருத்த மசோதா கொண்டு வரப் பட்டிருக்கிறது. இன்றைக்கு செப்டம்பர் 17-ம் தேதி. 26-ம் தேதியோடு இப்போதிருக்கும் 1955-ம் வருஷத்திய 25-வது சட்டத்தின் காலவரை முடிவாகப் போகிறது. இடையிலே உள்ளது எட்டு நாட்கள். இந்த எட்டு நாட்களுக்குள், திருத்தம் சம்பந்தப்படாத பல விஷயங்களைப் பற்றி ஆராய்ந்து திருத்தங்கள் கொண்டுவரவோ, அல்லது இந்தச் சட்டத்திலே யுள்ள குறைகள் 3 வருஷங்களாக இருந்த போதிலும், அதைப்பற்றி ஆராய்ந்து பார்க்க இப்போது செலக்ட் கமிட்டிக்கு இந்த மசோதாவை விட வேண்டும் என்று சொல்வது—இதற்குத் திருத்தங்கள் கொண்டு வரா மல் இருந்த போதிலும்—இந்தக் காலத்துடனுவது, இப்பொழுதாவது இந்தச் சட்டத்தை நீடிக்கவேண்டுமென்று அரசாங்கம் முடிவு செய்து கொண்டு வந்திருக்கும்போது, இந்தச் சட்டத்தை கால தாமதப்படுத்த வேண்டுமென்று பல குறைகளைச் சொல்லிப் பேசுவது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

தவிர, முதலில் மூன்று மாதங்களுக்கு மட்டிலும் நீடிக்கவேண்டு மென்று மசோதா கொண்டு வந்து, இப்போது சர்க்கார் திருத்தத்தில் ஒரு வருஷத்திற்கு நீடிக்க வேண்டுமென்று இருக்கிறது. ஆகவே, 1958-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 26-ந் தேதியிலிருந்து 1959-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 26-ந் தேதி வரையில் இந்தச் சட்டம் நீடித்திருக்கும் என்று எதிர்பார்க்கிறேன்.

சீரான முறையில் முடிவு காணமுடியவில்லை, அதனுல் ஹைக்கோர்ட் டுக்குப் போகிருர்கள் என்று சொல்லப்பட்டது. ஆனுல் அதற்கு புள்ளி விவரம் ஒன்றும் கொடுக்கப்படவில்லை. சென்னை ராஜதானியில், நமது மாகாணத்தில் குத்தகைக்காரர்கள் எவ்வளவு பேர்கள் இருக்கிருர்கள், வார சாகுபடியாளர்கள் எவ்வளவு, ஒப்பந்தம் மூலமாகவோ, வாய்மொழி யாகவோ, எழுத்து மூலமாகவோ, சாகுபடி செய்கிறவர்கள் எத்தனை லட்சம்பேர், அப்புறப்படுத்தப்பட்டவர்கள் எத்தனை பேர், அப்புறப்படுத்த பட்டாலும், அதை ஆட்சேபித்து மனுக் கொடுத்தவர்கள் எத்தனை பேர், எத்தனை பேருக்கு சாதகமாகத் தீர்ப்பு கொடுக்கப்பட்டது, எத்தனை பேர் களுடைய மனுக்கள் தள்ளப்பட்டது, என்று பார்த்தால் ஒரு சதவீதம் இருக்கலாம்—அதுவும் இருக்குமோ, இருக்காதோ என்பது சந்தேகம்.

இன்றைக்கு நான் இதைச் சொல்லும்போது சாகுபடியாளர்களுக்கு விரோத மாகப் பேசுகிறதாகவோ, அல்லது மிராசுதார்களுக்கு சாதகமாகப் பேசுகிறதாகவோ நினைக்கவேண்டாம். இந்தச் சட்டசபைக்கு வந்து பேசியதில் எப்போதும் சாகுப்படியாளர்களை ஆதரித்தே பேசியவன் நான். சாகுபடியாளர்களுக்கு நிச்சயமாக பலன் கிடைக்கவேண்டும் என்று அபிப்பிராயப்பட்டவர்கள், எந்தெந்த முறையில் சட்டம் தவறுத லாக நடத்தப்படுகிறது, எந்த முறையில் பலன் அளித்திருக்கிறது என்பதைப்பற்றி இந்த சபையிலும் பேசியிருக்கிறார்கள், முந்தின சட்ட சபையிலும் பேசியிருக்கிறார்கள். இதைப்பற்றி விமோசனம் இல்லை. நான் ஒரு விஷயம் சொல்ல ஆசைப்படுகிறேன். வாய்மொழியாக குத்தகை என்று சொல்லி ஒருவன் மனுக்கொடுப்பானானால், இல்லை என்று லேண்ட்-ஹோல்டர் ஆட்சேபித்து மனுக்கொடுத்து ஹைக்கோர்ட்டுக்கு கொண்டு போகப்படுகிறது. இது உண்மை. வாய்மொழியாக சாகுபடி செய்கிறேன் என்று ஒப்பந்தம் இருக்கிறது என்று சொல்லி, நிலச்சுவாந்தாருடைய நிலத்தில் ஆக்கிரமித்து சாகுபடி செய்கிறான். அந்த மாதிரி கேஸ்கள் கோர்ட்டில் எத்தனை வந்திருக்கிறது என்பதை யார் ஆராய்ந்து பார்த்தார் கள். அந்த மாதிரி கேஸ்களில் லேண்ட்-ஹோல்டர்கள் ஹைக்கோர்ட்டுக்குப் போகிறார்கள். ஏனென்றால் வேறு ஒரு கோர்ட்டுக்கும் போவதற்கு, அப் பீல் செய்வதற்கு விதி ஏற்படுத்தப்படவில்லை. ஆகையால் கோர்ட்டில் சரியான தீர்மானம் ஏற்படவில்லை என்று குடியானவனோ, அல்லது நிலச் சுவாந்தாரோ எண்ணினால் அப்பீல் செய்ய மேலே ஒரு இடம் இருப்பதால் போகிறார்கள்.

இரண்டாவதாக, "அக்ரிமெண்ட்" என்றால் அது சரியானபடி இதில் விவரிக்கப்படவில்லை, இந்த டெபெனிஷனில் சொல்லப்படவில்லை என்றெல் லாம் விவாதிக்கப்பட்டது. "அக்ரிமெண்ட்" என்றால் உலகம் அறிந்த விஷயம். வாய்மொழியாகவோ, அல்லது எழுத்து மூலமாகவோ பிரதிப் பிரயோஜனத்திற்காக செய்து கொள்ளப்படும் ஒப்பந்தத்திற்கு "அக்ரி மெண்ட்" என்று பெயர். எழுத்து மூலமாக ஒரு அக்ரிமெண்ட் இருந் தால் நல்ல முறையில் ருசுப்படுத்தக் கூடியதாக இருக்கும். இல்லையென் றால், இரு தரப்பினரும் பொய் சொல்லுவதாக இருக்கக்கூடியது. இதில் யார் பொய் சொல்லுகிறார்கள் என்று எப்படிச் சொல்ல முடியும். . .

ஸ்ரீ எ. கோவிந்தசாமி எழுந்தார்—

**Sri R. SRINIVASA IYER :** (Is he rising on a point of order, Sir ? Two hon. Members should not stand at the same time.)

**Mr. SPEAKER :** நான் எத்தனையோ தடவைகள் சொல்லியிருக் கிறேன். கனம் அங்கத்தினர் மறந்து போய்விட்டாற்போல இருக்கிறது. கனம் அங்கத்தினர் "பொய்" என்ற வார்த்தையை உபயோகித்ததற்காக எழுந்திருக்கிறார் என்று நினைக்கிறேன். அதில் பாயிண்ட் ஆப் ஆர்டர் ஒன்றுமில்லை. கனம் அங்கத்தினர் சீனிவாச அய்யர் தொடர்ந்து பேசலாம்.

**Sri R. SRINIVASA IYER :** அதனால், இந்தச் சட்டம் வழ-வழா என் றிருக்கிறது, கொழ-கொழா என்றிருக்கிறது, ஒன்றுமே அர்த்தம் புரியவில்லை என்றெல்லாம் சொல்லப்பட்டது. அநேக விதமாக சாகுபடியாளரையும், குத்தகைதாரர்களையும் பாதிக்கிற முறையில் ஏற்பட்டு நடந்து வருகிறது என்றும் சொல்லப்பட்டது. எங்கேயோ ஒரு இடத்தில் நல்ல மிராசுதார் கள் இல்லாமல், ஜமீந்தார்கள் போல கடுமையாக நடத்தியிருக்கலாம். நான்கு, ஐந்து பேர்கள் கார்கோடன்களாக இருந்திருக்கலாம். இந்த சட்டங்கள் யெல்லாம் அதனால்தான் வந்திருக்கிறது. உலக மனப்பான் மையை உத்தேசித்து ஒற்றுமையாகப் போயிருந்தால் இந்தச் சட்டம், போலீஸ், நடவடிக்கை, அப்பீல், குற்றச்சாட்டுகள் எல்லாம் வந்திருக்காது. போலீஸ்காரர்கள் நிலச்சுவாந்தார்களுக்குச் சாதகமாக நடந்து வருகிறார் கள் என்ற குற்றச்சாட்டுகளுக்கு இடமில்லாமல் போயிருக்கும். இரண் டொருவர் செய்கிறதற்காக, எல்லா லேண்ட்-ஹோல்டர்களும் கொடுந்தன் மைப் பண்ணுகிறார்கள், சாகுபடியாளர்களுக்கு கெடுதல் செய்கிறார்கள், அப்புறப்படுத்துகிறார்கள் என்று சொல்வதற்கில்லை. அந்த வகையில்

17th September 1958] [Sri R. Srinivasa Iyer]

இந்த அக்ரிமெண்ட் "இம்ப்ளெய்ட் ஆர் எக்ஸ்பிரஸ்" சரியானபடி அர்த்தம் புரியவில்லை என்றால் அதற்கு ஒரு தனி மசோதாவைக் கொண்டு வரலாம். சர்க்காரிலே அப்படிப்பட்ட யோசனை செய்திருக்கிறார்களோ என்னவோ தெரியவில்லை.

இரண்டு காரணங்களுக்காக இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. ஒன்று டிரான்ஸ்பர் ஆப் பவர். நான் ஒரு சிறு திருத்தம் கொடுத்திருக்கிறேன். குடியானவர்களுக்கு என்று பேசுகிறவர்கள் கூட, ஹைக்கோர்ட்டுக்கு ரிவிஷன் பெடிஷன் கொடுப்பதற்கு பதிலாக, டிஸ்ட்ரிக்ட் கலெக்டருக்கு விடவேண்டுமென்று சொன்னார்கள். ஆக, இதிலேயும் டிலேதான் ஆகும். அப்படியும் நான்கு, ஐந்து, ஆறு மாதங்கள் ஆகும். எந்தத் தீர்ப்பாளனாலும், சர்க்காரிலே எந்த நீதிபதியானாலும் தப்புத் தீர்ப்பு எழுத பாத்தியம் இருக்கிறது என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அதைத் திருத்தம் செய்யும் முறையில் அதிகாரம் இருக்கவேண்டும். ஹைக்கோர்ட் என்றால், அவர்கள் உயர்ந்த ஸ்தானத்தில் இருப்பவர்கள், பாகுபாடு இல்லாமல் செய்வார்கள் என்று ரிவிஷன் பவர் கொடுக்கப்பட்டிருக்கிறது. டிஸ்ட்ரிக்ட் கலெக்டருக்கு பதிலாக டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ் இருக்கலாம் என்று நான் சொல்லியிருக்கிறேன். தவிர, குடியானவர்கள் விஷயத்தில் ஒரு குடியானவன் திருநெல்வேலியில் இருப்பவனாக இருக்கலாம், அவன் ஹைக்கோர்ட்டுக்கு வரவேண்டுமென்றால், சென்னைக்கு வரவேண்டும். ரிவிஷன் பெடிஷன் செலவு, தகராறு சம்பந்தப்பட்ட தொகை எவ்வளவோ அதைப்போல் ஐந்து, ஆறு பங்கு ஆகிவிடக் கூடும். ஆகையால் தான் ஜில்லா கோர்ட் ஆக இருக்க வேண்டும் என்று நான் ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறேன். அந்த முறையிலே, இன்னொரு புரொவிஷன் டிரான்ஸ்பர் பெடிஷன். கீழ் கோர்ட்டில் நியாயம் கிடைக்கவில்லையென்றால் ஹைக்கோர்ட்டுக்கு பெடிஷன் கொடுக்கவேண்டும். அந்தத் தீர்ப்பை லேண்ட்-ஹோல்டர் எதிர்த்தாலும் இங்கு வரவேண்டும், குடியானவனாலும் இங்கு வரவேண்டும். குடியானவனுக்கு சௌகரியமாக இருக்கும் என்று என்னுடைய திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன்.

இன்னொரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். ஸ்டேட்மெண்ட் ஆப் ஆப்ஜெக்ட்ஸ் அண்டு ரீஸன்ஸில் சிறு நிலச் சொந்தக்காரர்களுக்கு நிவாரணம் அளிப்பதைப்பற்றி பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. பேர் ரெண்ட் ஆக்ட், கல்டிவேடிங் டெனெண்ட்ஸ் ஆக்ட் வந்ததிலிருந்து சிறு நிலச் சொந்தக்காரர்களுக்கு நிவாரணம் அளிக்கவேண்டுமென்று எல்லாக் கட்சிகளும் ஒப்புக்கொண்டிருக்கின்றன. அது இன்னும் ஆலோசனையில் இருக்கிறது. தஞ்சாவூர் டெனெண்ட்ஸ் அண்டு பண்ணையாள் ப்ரொடெக்ஷன் ஆக்டில் 1 வேலி நிலம், அதாவது 6.66 எக்கர், சொந்த சாகுபடிக்கு வைத்துக் கொள்ளலாம் என்று புரொவிஷன் இருக்கிறது. அந்த ஆக்ட் இப்போது இரண்டொரு ஜில்லாவில்தான் அமுலில் இருக்கிறது. அதை பாக்கி ஜில்லாக்களுக்கும் எக்ஸ்டெண்ட் பண்ணினால் எல்லாக் கட்சிக்காரர்களும் ஒப்புக்கொள்வார்கள் என்று எண்ணுகிறேன். இதற்காக ஒரு வருஷ காலம் நீடிக்கவேண்டிய அவசியம் இல்லை. அதையும் இதிலே ஒன்று அல்லது இரண்டு பிரிவுகள் போட்டு சேர்த்திருக்கலாம். இதற்குப் பெரிய ஆலோசனை தேவையில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. அதையும் சீக்கிரத்திலே கொண்டுவரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். 3-30 p.m.

அடுத்தபடியாக, இந்த 60 : 40 சட்டம் வந்த பிறகு எல்லாம் சுமுகமாகத் தான் நடந்து வருகிறது என்று நினைக்கிறேன். நாற்பது வாங்கிக்கொண்டிருந்த குடியானவனுடைய வாரம் அறுபது ஆனபிறகு நிலச்சுவான் தாருக்கும், குடியானவனுக்கும், எந்தவிதமான தகராறும் இல்லை. 1952-க்கு முன்னால் தஞ்சை ஜில்லாவிலும், மற்ற ஜில்லாக்களிலும் இருந்தது போல கலகங்களையோ, குற்றச்சாட்டுகளையோ நாம் பார்க்கவில்லை. நிலச்சுவான்தாரும் சரி, குடியானவனும் சரி, இரண்டு பேரும் திருப்தியாகத்தான் இருந்து வருகிறார்கள். ஆனால் உத்தேசித்திருக்கிற ஆறு எக்கர் சொச்சம் ஜாஸ்தி என்று தோன்றினால், ஐந்து எக்கராகவாவது வைத்துக்கொள்ளலாம். நிறைவேற்றப்படும் சட்டங்கள் எல்லாம் உணவு

உற்பத்தியை அதிகரிக்குமா, அல்லது உற்பத்தியைக் குறைக்குமா என்ற விஷயத்தில் மேலிடத்திலிருந்து கீழிடம் வரை—மாறுபட்ட அபிப்பிராயங்கள் இருந்து வருகின்றன என்பதை நாம் பார்க்கிறோம். (குறுக்கீடு : உங்களுடைய அபிப்பிராயம் என்ன ?) நான் வேறு சமயத்திலே இதைப் பற்றி பேசுகிறேன். புள்ளி விவரங்களுடன் பேசுவதற்கு இதுவரையிலும் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. இனிமேல் கிடைத்தால் பேசுகிறேன். ஆகவே சிறிய நிலச்சுவான்தார்களுக்கு பரிகாரம் அளிக்கவேண்டியது அவசியம். சர்க்காரும் இதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் இந்தப் பிரச்னை ஆலோசனையில் இருந்து வருகிறது என்று சொல்லுகிறார்கள். இதையும் இந்த மசோதாவிலேயே சேர்த்துக்கொண்டு வந்திருக்கலாம். ஒரு சிறிய திருத்தத்திற்காக இந்த மசோதாவை பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்ப வேண்டிய அவசியம் இல்லை. ஒரு வருஷத்திற்கு இதை நீடிக்கவேண்டும் என்று தோன்றவில்லை. ஆனால் மூன்று வருஷமாக இருந்தது இன்னும் ஒரு வருஷத்திற்கு நீடிப்பதைப் பற்றி ஒன்றும் இல்லை. இதற்கிடையில் அடுத்த மகசூல் சாகுபடி ஆரம்பமாவதற்கு முன்னால், அதாவது 1959. வருஷம் ஜூன் மாதம் 30-ம் தேதிக்குள் இந்தச் சிறு நிலச்சுவான்தார்களுக்கு அளிக்கவேண்டிய பரிகாரத்தைச் செய்யவேண்டும் என்று கேட்டுக் கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

**SRI M. KALYANASUNDARAM :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை இவ்வளவு காலம் தாழ்த்திக் கொண்டுவரவேண்டிய அவசியம் என்ன என்று எனக்குப் புரியவில்லை. அசல் சட்டம் காலாவதியாவதற்கு இன்னும் எட்டு தினங்கள் இருக்கும்பொழுதுதான் இது வெளியிடப்படுகிறது. ஒன்று, "நமக்குத்தான் மெஜாரிடி இருக்கிறதே, எப்பொழுது கொண்டுவந்தால் என்ன" என்று அமைச்சர் நினைத்திருக்கலாம். அல்லது டிபார்ட்மெண்ட் தூங்கிக்கொண்டிருக்க வேண்டும். இதற்கு யார் பொறுப்பாளி என்று தெரியவில்லை. சிறிய திருத்தம்தான் என்று சொன்னாலும், போதுமான அவகாசம் கொடுத்திருந்தால் இந்த சபையிலுள்ள அங்கத்தினர்கள் தமது கருத்துக்களை எடுத்துச் சொல்ல போதுமான சந்தர்ப்பம் கிடைத்திருக்கும். நியாயம் என்று ஒப்புக்கொள்வதையாவது பரிசீலனை செய்வதற்கு அவகாசம் ஏற்பட்டிருக்கும். இப்பொழுது எதிர்கட்சியினருக்கும் ஒரு சங்கடமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. பல திருத்தங்கள் கொண்டு வரவேண்டியிருந்தும், இந்த மசோதா காலாவதியாகி விடக்கூடாதே என்ற சங்கடமான நிலையில் இது எப்படியாவது நிறைவேற்றப்படட்டும் என்று நினைக்கவேண்டியிருக்கிறது. ஆகவே, சர்க்கார் வேண்டுமென்றே இப்படிச் செய்திருக்கிறார்களோ என்றுதான் சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. எனக்கு முன்பு பேசிய அங்கத்தினர் "இந்தத் திருத்தங்களுக்கு எல்லாம் அவசியம் இருக்கிறது, எதிர்கட்சியினர் வேறு யாரும் கொண்டுவரவில்லை, சாகுபடியாளர்களிடத்தில் அக்கரை உள்ளவர்களோ கொண்டுவரவில்லை" என்று சில அங்கத்தினர்களை அவர் சுட்டிக்காட்டினார். இதற்கு முன்பு இந்த சபையிலே ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இங்கே பேசப்பட்ட விஷயத்தை அங்கத்தினர் கவனத்திருந்தால் இந்தக் குற்றச்சாட்டை சொல்லியிருக்கமாட்டார். ஆகவே கவனிக்காமல் சொல்லக்கூடிய குற்றச்சாட்டு அல்ல இது. தெரிந்து கொண்டேதான் இந்தக் குற்றச்சாட்டை சொல்லுகிறார் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். பல தடவைகள் இந்த சபையில் ஆதாரங்களோடு, எப்படி இந்த சட்டம் வந்தபிறகு, நிலப் பிரபுக்கள், குத்தகைச் சீட்டை கூலிக்கு சாகுபடி செய்வதாக எழுதி வாங்கியிருக்கிறார்கள் என்பதை படித்தும் காண்பித்திருக்கிறேன். கனம் பக்தவச்சலம் அவர்கள் குளித்தலைக்கு வந்தபொழுது, அவர்களிடத்தில் இம்மாதிரி நூற்றுக்கணக்கான ஒப்பந்தங்கள் காண்பிக்கப்பட்டன. அவர் அவைகளைப் பார்த்துவிட்டு ஆச்சரியப்பட்டார். ரெவின்யூ அமைச்சர் அவர்களும் பார்த்திருக்கிறார்கள். அப்படியிருக்கும்பொழுது, சுட்டிக்காட்டவில்லை என்று சொன்னது ஆச்சரியமாயிருக்கிறது. அதைத் திருத்தவேண்டுமென்று யோசனை சொல்லியிருக்கிறோம். இந்த மாதிரி எழுதி வாங்கிவிட்டு முன்சீப் கோர்ட்டுக்குப் போய் "ஸ்டே" வாங்கிவிடுகிறார்கள். இதனால் விவசாயி நிலத்திலே இறங்க முடியவில்லை. குளித்தலை முன்சிப் கோர்ட்டில் 300–க்கு மேல் ஸ்டே மனுக்கள் தாக்கல் செய்யப்பட்டு ஸ்டே கொடுக்கப்பட்டிருக்கிறது.

17th September 1958] [Sri M. Kalyanasundaram]

திருச்சி ஜில்லாவில் முசிரி, குளித்தலை தாலுக்காக்களில்மட்டும் 300–க்கு மேற்பட்ட சாகுபடியாளர் மீது குத்தகைச் சீட்டு வாங்கிக்கொண்டிருந்தவர்கள் இப்படி குத்தகை சீட்டுகளை மாற்றி எழுதி வாங்கிக்கொண்டு, ஸ்டே மனுக்கள் போட்டு ஸ்டே வாங்கி இருக்கிறார்கள். இதைப்பற்றி சபையிலேயும் சொல்லப்பட்டிருக்கிறது. செக்ஷன் 6 (ஏ)–ஐத் திருத்தவேண்டுமென்ற யோசனையும் கொடுத்திருக்கிறேன். அந்த செக்ஷனில் "If in any suit before any Court for possession of or inj mction in relation to any land, it is proved by affidavit or otherwise .. .. .. " என்று சொல்லப்பட்டிருக்கிறது. அபிடவிட்மட்டும் போட்டால் நிரூபித்துவிட்டதாக ஆகாது என்று கோர்ட்டுகள் கருதி சாகுபடியாளர் சொல்லுவதை ஏற்றுக்கொள்ளாமல், நிலச்சுவான்தார்கள் சொல்வதை ஏற்றுக்கொண்டு, சாகுபடியாளர்களை நிலத்திலிருந்து வெளியேற்றுகிறார்கள். முசிரிக்குப் பக்கத்திலுள்ள கிராமங்களில் இந்த மாதிரி உத்தரவு வாங்கப்பட்டு விவசாயிகள் வெளியேற்றப்படுகிறார்கள். இதற்கு பொறுப்பு ரெவென்யூ டிபார்ட்மெண்டுதான். சட்டத்தின்படி குத்தகை முச்சிலிக்காவை நிலப்பிரபுக்கள் ஒப்புக்கொள்ளாவிட்டாலும் மூன்று நகல்கள் எடுத்து அனுப்பவேண்டும். ஒன்றை தாசில்தார் ரெஜிஸ்தார் பண்ணவேண்டுமென்று இருக்கிறது. ஒரு தாசில்தார்கூட இதைப் பதிவு செய்வது கிடையாது. கோர்ட்டில் சாட்சியமாக தாக்கல் செய்யப்படவேண்டுமென்று சொன்னால், ஒரு தாசில்தார் ஆபீசிலிருந்தாவது ரிக்கார்டு வருவது கிடையாது. எந்த ரிக்கார்டுகளை அந்த ஆபீசில் ஒழுங்காக வைத்திருக்கிறார்கள்? எல்லாம் வேஸ்டுபேப்பர் பாஸ்கெட்டுக்குத்தான் போகிறது. நிலப்பிரபுக்கள் இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக்கொண்டு, தாலுகா ஆபீசில் சொல்லி அதைப் பதிவு செய்யாமல் தடுத்து முன்சீப் கோர்ட்டில் மனுப் போட்டு விவசாயிகளை வெளியேற்றுவிடுகிறார்கள். ஆகவே செக்ஷன் 6–ஏஐத் திருத்தவேண்டுமென்று சொல்லியிருக்கிறோம். இடைத்தாகர்கள் முச்சிலிக்கா எடுத்துக்கொண்டிருந்தால், அந்த முச்சிலிக்காவை ரத்து செய்துவிட்டால் அவர் கீழ் குத்தகை எடுக்கக்கூடிய விவசாயிக்கு உரிமை கிடையாது என்று ஹைகோர்ட் சொல்லியிருக்கிறது. கையேறு மாட்டேறு சட்டம் வந்தபோது இம்மாதிரிப் பகுதி சேர்க்கப்பட்டிருந்தது. இந்த மசோதா இவ்வளவு காலம் தாழ்த்தி தயாரிக்கப்பட்டிருந்தும்கூட ஏன் அந்த மாதிரி ஷரத்து சேர்க்கப்படவில்லை என்று புரிந்து கொள்ள முடியவில்லை. இந்த இரண்டும் சேர்க்கப்பட்டிருக்குமேயானால், அக்கிரமமான நில வெளியேற்றங்களை தடுத்து நிருத்தியிருக்கலாம். அமைச்சர் அவர்கள் பொறுமையோடு கவனிக்கவில்லை என்றுதான் நினைக்கவேண்டியிருக்கிறது. இலாக்காவில் இருக்கும் அதிகாரிகளுக்கு புரிந்து கொள்ள சக்தியில்லை என்று நான் சொல்ல மாட்டேன், ஆனால் பொறுமையில்லை என்றுதான் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த சட்டத்தை இன்னும் ஒரு வருஷத்திற்கு நீடிப்பது என்பது ஆட்சேபனைக்குரிய விஷயம் அல்ல. இன்னும் ஒரு வருஷத்திற்கு நீடித்துத்தான் ஆக வேண்டும். இம்மாதிரி திருத்தங்களைச் செய்து அதை நீடித்தால்தான் பயனுடையதாக இருக்கும் என்பதை கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். பல விடங்களில் நில வெளியேற்றம் செய்யப்பட்டிருக்கிறது என்று நான் சொல்லும் பொழுது, புள்ளி விவரம் கொடுக்கமுடியுமா என்று கேட்டார்கள். ஏற்கெனவே கொடுத்தும் இருக்கிறேன். தஞ்சை, திருச்சி, மற்ற ஜில்லாக்களைப் பற்றியும் புள்ளி விவரங்கள் கொடுக்க முடியும். சிறு நிலச்சுவான்தார்களுக்கு பாதுகாப்பு அளிக்கவேண்டுமென்பதற்காக "விதி விலக்கு" மட்டும் கொடுத்து, சட்டம் வருமேயானால், நில வெளியேற்றம் தான் அதிகரிக்குமே தவிர, இந்த நிலச் சீர்திருத்தம் பூரணமாகாது. நிலச் சீர்திருத்தத்தை பூரணமாகச் செய்யப் போகிறோம் என்று சொல்லி, இதுவரையிலும் செய்த சட்டங்களையும் கொஞ்சம் கொஞ்சமாக ரத்து செய்து விடுவார்களோ என்றுதான் நினைக்கவேண்டியிருக்கிறது. குத்தகை விவிசாயிகளை நிலத்திலிருந்து வெளியேற்றக்கூடாது என்று திட்டம் 1955–ம் வருஷத்திலேயே இருந்தது. நியாய வாரத்தை நிர்ணயிக்கிறோம் என்று வாக்குறுதி கொடுத்தார்கள். அதற்குப் பிறகு நில உடமைக்கு வரம்பு,

கட்டி, சொந்த சாகுபடிக்கு எவ்வளவு வைத்துக்கொள்ளலாம் என்று நிர்ணயம் செய்து, அதைவிட அதிகமாகச் சாகுபடி செய்து கொண்டிருப்பவர்கள் விவசாயிகளுக்கு பங்கிட்டுக் கொடுக்கவேண்டுமென்று 1954-ம் வருட கவர்னர் உரையில் இருக்கிறது. இதுதான் அரசாங்கத்தின் கொ
3-40 p.m. ள்கை என்று அமைச்சர் அவர்களும் வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இப்பொழுது 3 வருஷங்கள் ஆகியும் கூட இன்னும் இந்தக் கஷ்டங்கள் போகவில்லை. அதற்குப் பதிலாக, கொடுத்த பாதுகாப்பை எப்படி எப்படிப் பரிக்கலாம் என்கின்ற நிலைமைதான் ஏற்பட்டிருக்கிறது.

அடுத்தப்படியாக, நில உடமைக்கு வரம்பு கட்டி, அதிகமாக இருக்கக்கூடிய நிலத்தை, சிறு நிலச்சுவான்தார்களுக்குப் பாதுகாப்பு கொடுக்க வேண்டுமென்பதற்காக விவசாயிகள் பாதிக்கக்கூடிய முறையில் அவர்களுக்குப் பங்கு போட்டுக் கொடுக்காமலிருந்தால்தான் இதை வெற்றிகரமாக நடத்த முடியும். சிறு நிலச்சுவான்தார்கள் சொந்த சாகுபடிக்கு நிலத்தை எடுத்துக்கொள்ளக்கூடிய முறையில் சட்டம் திருத்தப்பட்டால் நூற்றுக்கணக்கான விவசாயிகள் நிலத்தை இழக்க நேரிடும். இந்த மூன்று வருஷ அவகாசத்தில் நிலப் பிரபுக்கள் தங்கள் நிலத்தை குடும்பத்தில் இருக்கக்கூடிய பலபேர்களுக்கும் 10 ஏகரா வீதம் பங்கு போட்டு வைத்திருக்கிறார்கள். பல நிலப் பிரபுக்கள்கூட சிறு நிலச்சுவான்தார் என்று சொல்லிக்கொண்டு சொந்த சாகுபடிக்கு வேண்டும் என்று விவசாயிகள் கையில் இருக்கக்கூடிய நிலத்தை பிடுங்கிக்கொள்ளக்கூடிய நிலைமை ஏற்படும். ஆகவே இந்த அளவு காலதாமதம் கூடாது. அடுத்து வரக்கூடிய திருத்த மசோதாவானது பூரணமாக இருக்க வேண்டும். நில உடமைக்கு வரம்பு கட்டவேண்டுமென்பதை வற்புறுத்திக் கூறுகிறேன். இதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன என அமைச்சர் அவர்கள் சொன்னால், இம்மாதிரி பொதுவான முக்கியமான விஷயங்களில் எதிர்க்கட்சிகளின் உதவி வேண்டுமென்று கருதினால், எதிர்க்கட்சிகளின் ஒத்துழைப்பைப் பெறலாம். எதிர்க்கட்சித் தலைவர்களையும் மற்ற முக்கியஸ்தர்களையும் கூட்டிவைத்துப் பேசி சங்கடங்கள் என்னென்ன இருக்கின்றன என்பதை ஆராய்ந்து முடிவு செய்யலாம். எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய முறையில் திருத்தங்களைக் கொண்டுவரலாம். அம்மாதிரி ஆலோசனைக்குப் பிறகு கொண்டுவரப்படும் மசோதாவிற்குச் சக்தி அதிகமாக இருக்கும். நல்ல முறையில் அமுல் நடத்துவது சாத்தியமாகும். ஆகவே, இந்த மசோதாவை அப்படியே நிறைவேற்றிக்கொண்டாலும் கூட, அடுத்து வரக்கூடிய மசோதாவை துரிதமாகக் கொண்டுவரவேண்டும், இந்த மசோதாவைக் கொண்டுவருவதற்கு முன்பு எல்லாக் கட்சியினர்களின் அபிப்பிராயங்களையும் கேட்கவேண்டுமென்று வற்புறுத்திக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பவேண்டுமென்ற திருத்தத்தை நான் ஒத்துக்கொள்ளுவதற்கில்லை. அதற்கான காரணங்களை விளக்குகிறேன். இது மிக சின்னஞ்சிறிய மசோதா. இதிலே இருப்பது மூன்றே மூன்று பிரிவுகள்தான். முதலாவது பிரிவு மசோதாவின் டைடில். அதோடு அது போய்விடுகிறது. இரண்டாவது பிரிவில்தான் இந்தச் சட்டத்தை மூன்று மாதங்கள் நீடிக்கவேண்டுமென்று இருக்கின்றது. அதை நான் ஒரு வருஷமாக மாற்றவேண்டுமென்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். மூன்றாவது பிரிவு புதியதாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஒரு ஆர்.டி.ஒ ஏற்கனவே 145, Cr.P.C. பிரகாரம் ஒரு தீர்ப்புக் கொடுத்திருந்தால் இது வக்கீல்களுக்கு நன்றாகத் தெரியும்—பிற்பாடு இந்த Cultivating Tenants Prot ction Act பிரகாரம் ஏதாவது பெடிஷன் கொடுக்கப்பட்டால், அது அதே ஆர்.டி.ஒ. வுக்குப் போனால் அவ்வளவு சரியல்ல. ஏனென்றால் அவர் மனது ஒருவிதத்தில் பண்படுத்தப்பட்டிருக்கிறது. அது எப்பொழுதும் அவரை உறுத்திக்கொண்டிருக்கிறது. ஆகையால் அவரே இந்த பெடிஷன்களையும் விசாரிக்கக்கூடாது. வேறு புதிய ஆர்.டி.ஒ. இதை விசாரிக்கவேண்டுமென்று திருத்தம்

17th September 1958] [Sri M. A. Manickavelu]

கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏனென்றால் இதை அவர் புதியதாக கவனிப்பார். இந்த ஷரத்து மிகவும் அவசியமானது என்று கருதி இதைச் சேர்த்திருக்கிறோம். ஏன் இந்தத் திருத்தம் மாத்திரம் சேர்க்கப்பட்டிருக்கிறது, மற்ற திருத்தங்களெல்லாம் சேர்க்கப்படவில்லை என்று சொன்னார்கள். மற்ற திருத்தங்களெல்லாம் அவ்வளவு சுலபம் அல்ல. இந்தத் திருத்தம் ரொம்ப அவசியம். இது மனிதனுடைய முக்கியமான உரிமையை பாதிக்கிறது. ஏற்கனவே விசாரித்த ஆபீஸரே மறுபடியும் விசாரித்தால், நியாயம் சரியாகக் கிடைக்காது. ஆகவேதான் இந்த புது ஷரத்தை இப்பொழுது இந்த மசோதாவில் சேர்த்திருக்கிறோம். அவ்வளவுதான் இந்த மசோதாவில் இருப்பது. மூன்று பிரிவுகளைக் கொண்ட இந்த மசோதாவை பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பவேண்டுமென்று சொல்லுவது நியாயமல்ல என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அதோடுகூட, இந்த மசோதாவைப் பற்றி பேசும்போது அநேக அங்கத்தினர்கள் மற்ற விஷயங்களெல்லாம் பற்றி எடுத்துச் சொன்னார்கள். அதாவது, இந்தச் சட்டம் ஏற்பட்டு, அது நடைமுறையில் நடந்துவருவதிலே பல கஷ்டங்கள் இருக்கின்றன. இப்பொழுது அங்கத்தினர்கள் சில கஷ்டங்களைப் பற்றி சொன்னார்கள். இன்னும் பல கஷ்டங்கள் இருக்கின்றன. எனக்குத் தெரிந்த சில கஷ்டங்கள் இருக்கின்றன. ஆபீஸர்களும், போர்டும் சில கஷ்டங்களை எடுத்துச் சொன்னார்கள். இம்மாதிரி கஷ்டங்களெல்லாம் இருப்பதனால்தான், இந்தத் திருத்தங்களை உடனடியாகக் கொண்டுவர முடியவில்லை.

நாங்கள் காலதாமதம் செய்கிறோம் என்று ஒரு அங்கத்தினர் சொன்னார். நாங்கள் காலதாமதம் செய்யக்கூடாது, 3 மாதங்கள் போதும் என்றுதான் முதலில் நினைத்தோம். ஆனால் அது இவ்வளவு சீக்கிரம் முடியாது. பல பிரச்னைகள் எழுகின்றன என்று தோன்றியதால் மறுபடியும் ஒரு வருஷத்திற்கு இந்த சட்டத்தை நீடிக்கவேண்டுமென்று திருத்தம் அமைக்க வேண்டியிருந்தது. கனம் அங்கத்தினர் ஒருவர் கூறினார் "இதை ஏன் முன்னாலேயே கொண்டுவரக்கூடாது? இவ்வளவு நெருக்கடியான நிலைமையில்தான் கொண்டுவரவேண்டுமா? நிர்ப்பந்தமான கட்டத்தில் கொண்டுவந்து ஒரு வருஷம் நீடிக்கவேண்டுமென்று கேட்கிறார்களே? டிபார்ட்மெண்டு தூங்குகிறதா?" டிபார்ட்மெண்டு ஒன்றும் தூங்கவில்லை. டிபார்ட்மெண்டு இதை கவனித்துக் கொண்டு வருவதால்தான் புதுப்புது பிரச்னைகள் எழுகின்றன. அதையெல்லாம் ஆராய்ந்து அதற்கு தக்க பரிகாரம் தேடவேண்டியிருக்கிறது. இதிலிருந்தே டிபார்ட்மெண்டு இதை அடிக்கடி கவனித்து வருகிறார்கள் என்பது தெரியவரும். ஆகையால் தூங்குகின்ற சமாசாரம் ஒன்றுமில்லை. எவ்வளவு சீக்கிரம் கொண்டுவரமுடியுமோ அதற்காக எல்லா பிரயாசைகளையும் எடுத்துக்கொண்டு வருகிறோம்.

சிறு நிலச் சுவான்தார்களுக்கும் ஓரளவுக்கு பாதுகாப்பு கொடுக்கவேண்டும். அவர்களுக்கு எந்த வகையிலே கொடுப்பது, இம்மாதிரியான பிரச்னைகளெல்லாம் இருக்கின்றன. சில விதவைகள் இருக்கிறார்கள். அவர்களுக்கு நிலமேதான் கதி. நிலத்தையே நம்பி அவர்கள் வாழ்க்கை நடத்துகிறார்கள். அவர்களுக்கு வேறு வழியில்லை. இன்னும் இம்மாதிரி வேறு சிலரும் இருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் நியாயமான முறையில் ஒரு பரிகாரம் தேடவேண்டும். அவர்களுடைய வாழ்க்கை பாதிக்காத வகையிலும் மற்ற டெனண்டுகளுக்கும் பாதகம் ஏற்படாத வகையிலும் ஒரு சூழ்நிலை அமைக்கவேண்டும். அதற்காகத்தான் கொஞ்சம் தாமதம் ஆகிறது.

சட்டம் செய்வதிலே இன்னொன்று கவனிக்கவேண்டும். எவ்வளவு பெரிய மேதாவிகள் சேர்ந்து சட்டம் செய்தாலும் கூட, அதில் ஒரு கஷ்டமும் ஏற்படாமல் உலகத்தில் எங்குமே இருந்ததில்லை. சட்டம் அமுல்

செய்யப்படும்பொழுது தான் கஷ்டங்கள் தெரிகின்றன. அதனால்தான் "கேஸ் லா" பிரமாதமாகிக்கொண்டு வருகிறது. ஒரு வருஷத்தில் கொடுக்கப்பட்ட தீர்ப்பு வரும் வருஷத்தில் இருப்பதில்லை. அது மாறிக்கொண்டே போகிறது. கோர்ட்டுகளில் நிறைய கேஸ்கள் வந்துகொண்டிருக்கின்றன. வக்கீல்களுக்கும் நிறைய வேலை இருந்துகொண்டிருக்கிறது. "கேஸ் லா" பெரிதாகிக்கொண்டே வருகிறது. துருவித் துருவி ஆராய்ந்து சட்டம் செய்தாலும் அதை அமுல் நடத்தும்பொழுது ஏதாவது கஷ்டம் ஏற்படத்தான் செய்கிறது. அதை நாம் தவிர்க்க முடியாது. எல்லாவற்றிற்கும் நாம் முதலிலேயே சட்டத்தில் பந்தோபஸ்து செய்துவிட முடியாது. நடைமுறையிலே பல கஷ்டங்கள் ஏற்படுவதை நாம் பார்க்கிறோம். அதற்கெல்லாம் தகுந்த முறையில் நாம் பரிகாரம் தேடி திருத்தி அமைக்க வேண்டியிருக்கிறது. பின்பு வரும் மசோதா கட்டாயம் பொறுக்குக் கமிட்டிக்கு விடப்படும். பொறுக்குக் கமிட்டியில் அங்கத்தினர்கள் தங்களது ஆலோசனைகளை சொல்லலாம். பிறகு எந்த வகையிலே எந்த அளவில் திருத்தங்களை அமைக்கலாம் என்று யோசித்து திருத்தங்களைச் செய்யலாம். இந்தச் சட்டத்தின் காலத்தை நீடிக்கவேண்டுமென்ற ஒரு கருத்துத்தான் இந்த மசோதாவில் இருப்பது. ஆகையால் இந்தக் கருத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். பின்னால் கூடிய சீக்கிரம் வரப்போகின்ற மசோதாவில் கஷ்டங்களையெல்லாம் ஆராய்ந்து பார்த்து, நடுநிலைமையிலிருந்து நியாயம் வழங்கக்கூடிய முறையிலே சீர்தூக்கிப் பார்த்து அதை நல்ல வகையிலே அமைக்கலாம். பொறுக்குக் கமிட்டிக்கு இந்த மசோதாவை அனுப்பவேண்டுமென்ற திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளுவதற்கில்லை என்பதை சொல்லிக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri N. K. PALANISAMI:** கனம் மந்திரி அவர்கள் பின்னால் திருத்திக்கொள்ளலாம் என்கிறார்கள். அதனால், நான் என் திருத்தத்தை வற்புறுத்தவில்லை.

The amendment was by leave withdrawn.

**Sri A. VEDARATHNAM:** கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் பேசியபோது, 300—க்கு அதிகமான புகார்கள், விண்ணப்பங்கள் வந்து இருப்பதாகச் சொன்னார்கள். அது திருச்சி ஜில்லாவில் 28 கிராமங்களைச் சேர்ந்தது அல்லவா? அப்படி தஞ்சை ஜில்லாவிலிருந்து, அதே மாதிரி விண்ணப்பங்கள் வந்திருக்கின்றனவா என்று அமைச்சர் அவர்கள் தெரிவிக்கவேண்டும்.

**Mr. SPEAKER:** How can the hon. Member reply to it? Only the Hon. Minister can reply to it. I have no objection to the Hon. Minister replying to it.

**The Hon. Sri M. A. MANICKAVELU:** இந்தப் பிரச்சினையில் சம்பந்தப்படாத ஒன்றை அங்கத்தினர் அவர்கள் சொல்லிவிட்டார்கள். அதற்கு இங்கே விளக்கம் சொல்லுவதற்கில்லை. (சிரிப்பு.)

**Mr. SPEAKER:** The question is—

'That the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 26 of 1958) be taken into consideration'.

The motion was put and carried and the Bill was taken into consideration.

17th September 1958]

*Clause* 2.

MR. SPEAKER : The motion is—

' That clause 2 do stand part of the Bill.'

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

' *For* clause 2, *substitute* the following clause, namely :—

" 2. *Amendment of section* 1, *Madras Act XXV of* 1955.—In sub-section (3) of section 1 of the Madras Cultivating Tenants Protection Act, 1955 (Madras Act XXV of 1955) (hereinatfer referred to as the principal Act), for the words ' for a period of three years ', the words ' for a period of four years ' shall be substituted."

The amendment was put and carried.

Clause 2, as amended, was put and carried.

*Clause* 3.

MR. SPEAKER : The motion is—

' That clause 3 do stand part of the Bill.'

SRI R. SRINIVASA IYER : இந்த விஷயத்தில், என் திருத்தம் ஒரு சிறிய விஷயந்தான். மற்ற அங்கத்தினர்கள், ஒரு விதமாக இதை . .

MR. SPEAKER : Let the hon. Member first move his amendment. It will have to be seconded.

* SRI R. SRINIVASA IYER : Sir, I move—

' In the proposed sub-section 6 (*c*) (i) line 24 *for* words " The High Court " *substitute* the words " The District Judge or Subordinate Judge having jurisdiction over the land concerned ", and in the proposed section 6 (*c*) (2) in line 30 *for* the words " who thereafter holds the inquiry ", *substitute* the words " to whom the application or other proceeding is transfered.". '

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

' In sub-clause 2, *after* the words " when it was transferred " *add* the words " and disposed of within three months ".'

The amendment was duly seconded.

MR. SPEAKER : Now the clause and the amendments are before the House for discussion.

SRI R. SRINIVASA IYER : Sir, new Section 6-C says—

' (1) On the application of any of the parties and after notice to the parties and after hearing such of them as desire to be heard, or of its own motion without such notice, the High Court may at any stage transfer any application or other proceeding under this Act pending before any Revenue Divisional Officer in any district for disposal to any other Revenue Divisional Officer in the same district.

(2) Where any application or other proceeding has been transferred under sub-section (1), the Revenue Divisional Officer who thereafter holds the inquiry may, subject to any special directions in the case of an order of transfer, either hold the inquiry *de novo* or proceed from the point at which the said application or other proceeding stood when it was transferred.'

Sir, in my amendment I want that for the words "The High Court", the words "The District Judge or Subordinate Judge having jurisdiction over the land concerned" should be substituted. This is intended for the benefit of both the parties so that they may not spend a lot of money over any trainage for going to the High Court to file a Transfer petition. It will be a original application. I believe, the court-fee for an original application will be Rs. 25. It will be an original application for transfer of the exercise of the original civil jurisdiction of the High Court. Therefore, the proper thing will be to give the jurisdiction to the District Judge or Subordinate Judge. Sir, in the Tanjore district, for example, the District Judge has got territorial jurisdiction over only one taluk, Pattukottai. In all other taluks like Mannargudi, Arantangi and Tanjore, the Subordinate Judge has got the original jurisdiction of the principal Civil Court. Whoever has got the original jurisdiction of the principal Civil Court, will have the power of transfer. I am aware that in the original Act, revision petition can go to the High Court but there is no power of appeal. The question of revision is something different from transfer. Therefore, there should be a proper provision to enable the party affected to go to the District Judge. My amendment is intended to benefit the cultivating tenants so that they may not spend a lot of money for filing a Transfer petition in the High Court. Of course, there is a suggestion that the District Collector should be given the power of Revisional jurisdiction but it is not possible for us to amend the Original Act for that purpose. Therefore, I have not suggested it. But so far as the question of revision is concerned, I shall be glad if the Government can bring forward a small amending Bill. So far as transfer is concerned, I do not know why the High Court is given that power. That power should be vested in the District Judge or Subordinate Judge, as is followed in the Criminal Procedure Code.

Regarding the other amendment, it is only the R.D.O. to whom the application or other proceedings is transferred, who will make the inquiry. Therefore, I have proposed in my amendment the words 'to whom the application or other proceeding is transferred'. It is only intended to make the position clear. For instance, if a case is transferred from the Revenue Divisional Officer 'A' to the Revenue Divisional Officer 'B', the latter will be the person who will either proceed from the stage where it was left or start *de novo*. A similar procedure is followed in the Criminal Procedure Code where the maigstrate to whom it is transfered can start *de novo* or start from the place where it was left before a charge was framed. This is all I want to say about my amendment.

17th September 1958]

MR. SPEAKER : I thought Mr. Srinivasa Iyer had sufficiently explained the position. Anyway, the hon. Member Sri Kalyanasundaram can speak now.

SRI M. KALYANASUNDARAM : Sir, I shall try to finish my speech as quickly as possible. இந்த 6 (ஸி) பிரிவு சம்பந்தப்பட்ட வரை, அமைச்சர் அவர்கள் நோக்கம் நேர்மையானதாக இருக்கலாம். ஆனால், விசாரணை நீடிக்கக்கூடிய தந்திரங்களை மிராசுதார்கள் கையாளக்கூடும் என்பதை கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ஏற்கனவே 145–வது செக்ஷன்படி விசாரணை நடத்திய ஆர்.டி.ஓ.-வே நடத்தக் கூடாது என்றால், திருத்தம் வந்திருக்கக் கூடிய முறையே வேறு. 145–வது செக்ஷன்படி, முன் கூட்டியே, வழக்கை ஹை கோர்ட்டிடம் கொண்டுபோய், ஸ்டே வாங்கி நீடிக்க வைத்து விடலாம். விவசாயி ஹை கோர்ட்டில் வந்து வாதாட முடியாத காரணத்தால், ஒரு வருஷத்திற்கு மேல் தாமதமாகி விடும். இதில் ஆபத்து இருக்கிறது. அந்தச் அடிப்படையில், இந்தச் சர்க்காரின் திருத்தத்தையே ஆட்சேபித்து இருக்க வேண்டியது. அது இல்லாவிட்டாலும், நண்பர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் திருத்தத்தையாவது அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். மதராஸ் வரை வருவதற்குப் பதிலாக ஜில்லா அந்தஸ்திலாவது இருந்தால் கொஞ்சம் சிரமம் குறையும். ஆகவே, கனம் ஸ்ரீனிவாச அய்யர் அவர்களின் திருத்தத்தை ஆதரிக்கிறேன். காரணம் வேறு. (சிரிப்பு).

SRI S. M. ANNAMALAI : தலைவர் அவர்களே, என்னுடைய திருத்தம், மாற்றப்பட்ட வழக்குகள் மூன்று மாதத்திற்குள் பரிசீலனை செய்யப்பட வேண்டும் என்பதுதான். வாரந்தார்கள் கஷ்டப்படுகிறார்கள். இந்தத் திருத்தத்தை சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I am sorry I am unable to accept any of the amendments. The set-up in the parent Act is different and so we have to conform as far as possible to that. Now what is the set-up? In section 6-B of the original Act, power is given to the High Court for revision. Section 6-B says—

'The Revenue Divisional Officer shall be deemed to be a Court subordinate to the High Court for the purposes of section 115 of the Code of Civil Procedure, 1908, and his orders shall be liable to revision by the High Court under the provision of that section.'

That being so, it would not be quite appropriate to give this power for transfer of petitions either to the District Judge or to a Subordintae Judge, having given the jurisdiction for the purpose to the High Court. So, any such matter must go to the High Court only and we should not create another subordinate authority. We must conform, as I said, to the set-up of the parent Act. Therefore, I am unable to accept that amendment. 4 p.m.

With regard to wording, probably the hon. Member may think it is right to adopt the phraseology he has suggested. I am mostly guided by the Law Department and the phraseology as it is, is quite good. So, why, unnecessarily have an alteration? If it is

absolutely necessary, it is all right. But it is a question of words. The Law Department says it is quite all right. I am, therefore, unable to accept that amendment also.

With regard to the other amendment, which seeks to lay down a limit of three months, I am unable to accept that also. All these could be considered when the bigger Bill comes in. This is not the time nor the occasion to limit the period of enquiry to three months.

MR. SPEAKER : I shall now put the amendments to vote. Is Mr. Srinivasa Iyer withdrawing his amendment?

SRI R. SRINIVASA IYER : In view of the explanation given by the Hon. Minister, I beg leave to withdraw my amendment.

SRI M. KALYANASUNDARAM : No, no.

SRI R. SRINIVASA IYER : On a point of order. The mover of an amendment is entitled under the rules, to withdraw it. The only point is whether the House gives him leave.

MR. SPEAKER : The rule is quite clear. Rule 72 says :

" A member who has moved a motion or an amendment to a motion may withdraw the same with the leave of the Assembly expressed without a dissentient voice."

So, I want to know whether the House gives him leave to withdraw.

SRI M. KALYANASUNDARAM : No.

MR. SPEAKER : Then I shall put the amendment to vote. The question is—

' In the proposed sub-section 6 (c) (i) line 24, *for* the words " The High Court,", *substitute* the words " The District Judge or Subordinate Judge having jurisdiction over the land concerned ", and in the proposed section 6 (c) (2) in line, 30, *for* the words " who thereafter holds the inquiry ", *substitute* the words " to whom the application or other proceedings is transferred ".'

The amendment was put and the House divided thus :

*Ayes.*

1 Sri K. Sattanatha Karayalar.
2 ,, A. V. P. Periavalaguruva Reddi.
3 ,, S Ramaswami Thevar.
4 ,, V. Subbiah.
5 ,, T. V. Thiruvenkadasami Naicker.
6 ,, P. Veerappa Kounder.
7 ,, T. S. Ramaswamy Pillai.
8 ,, A. Govindasamy.
9 ,, K. Anbazhagan.
10 Sri S. A. M. Annamalai Odayar.
11 ,, M. Selvaraj.
12 ,, C Nataraja Odayar.
13 ,, S. M. Annamalai.
14 ,, M. P. Sarathy.
15 ,, P. U. Shanmugam.
16 ,, M. Kalyanasundaram.
17 ,, N. K. Palanisami.
18 ,, V. K. Kothandaraman.
19 ,, A. R. Marimuthu.

17th September 1958]

*Noes.*

1 Sri B. Bhaktavatsalu Naidu.
2 „ P. Appavu.
3 „ K. S. Ardhanareeswara Gounder.
4 „ M. A. B. Arumughasamy.
5 „ V. S. Arunachalam.
6 „ A. Chinnasami.
7 „ T. T. Daniel.
8 The Hon. Sri C. Subramaniam.
9 „ M. Bhaktavatsalam.
10 „ M. A. Manickavelu.
11 „ P. Kakkan.
12 Sri P. G. Karuthiruman.
13 „ T. P. Elumalai.
14 „ V. Govindaswami Naidu.
15 „ G. G. Gurumurthi.
16 „ P. Jayaraj.
17 „ R. Kandasami.
18 „ M. R. Kandaswami Mudaliar.
19 „ T. Karia Gounder.
20 „ V. K. Krishnamurthi.
21 „ R. Krishnasami Gopalar.
22 „ P. Kuppusami.
23 „ P. S. K. Lakshmipathiraj.
24 „ S. Lazar.
25 „ T. Manavalan.
26 „ A. Mariappan.
27 The Hon. Sri V. Ramaiah.
28 „ Srimathi Lourdammal Simon.
29 Srimathi D. Raghupathi Devi.
30 Sri J. Matha Gowder.
31 „ M. Mayandi Nadar.
32 „ M. C. Muthukumaraswamy.
33 „ T. M. Nallaswami.
34 „ K. P. Palaniswamy.
35 „ K. Ponnian.
36 „ S. Ramakrishna Thevar.
37 „ P. Ramachandran.
38 „ N. S. Ramalingam.
39 „ T. R. Ramamritha Thondaiman.
40 „ S. C. Sadayappa Mudaliar
41 „ S. Samikannu Padayachi.
42 „ T. Sampath.
43 „ S. Sangili.
44 „ V. Sankaran.
45 „ M. K. Somasundaram.
46 „ R. Srinivasa Iyer.
47 „ T. K. Subbiah.
48 „ A. R. Subbiah Mudaliar.
49 „ K. S. Subramania Gounder.
50 „ S. Tangavelu.
51 „ N. R. Thiagarajan.
52 „ P. Urkavalan.
53 „ K. Vasudevan.
54 „ A. Vedarathnam.
55 „ V. Vedayyan.
56 „ A. Samuel Nadar.
57 „ M. William.

*Neutral*

Nil.

Ayes—19. Noes—57. Neutral—Nil.

The amendment was lost. 4-10 p.m.

MR. SPEAKER : I shall put Mr. Annamalai's amendment to vote now. The question is—

" In sub-clause 3, *after* the words ' when it was transferred, *add* the words ' and disposed of within three months '."

The amendment was put and lost.

Clause 3 was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. A. MANICKAVELU : Mr. Speaker, Sir, I move—

' That the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 26 of 1958) as amended be apssed '.

MR. SPEAKER : The question is :

' That the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 26 of 1958) as amended be passed '.

The motion was put and carried and the Bill as amended was passed.